உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - ஆவணி - 2016 - ஆகஸ்ட்     இதழ் - 50



வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மானோக்கி மலர்முகத்தள் கழனி வாசல்
மதுநதியாள் மரகதத்தாள் கோவி லூரின்
மங்கலப்பெண் திருநெல்லை மாது காண
மடம்வைத்த ஆண்டவரின் மரபில் வந்தார்
தானோக்கி வணங்கிஅவள் வழியே நின்று
தலைவணங்கும் மெய்யப்ப சாமிக் கிங்கே
தான்வந்த பிணிபோக்கும் தாயே ஆகித்
தான்காத்தாள் தளிரடிகள் போற்றி போற்றி !
வானோக்கி மழைவேண்டும் பயிரைப் போல
வந்துனது திருமுன்பு வணங்கு வாரை
வாழவைக்கும் பெருங்கருணைத் தாயே உன்னை
வணங்கியடி தொழும்சாமி நீடு வாழ
நீநோக்கி அருள்புரிக நின்னை எங்கள்
நெஞ்சமெனும் கருவறைக்குள் நிலையாய் நின்று
நினைத்தாரைக் காப்பதுன்றன் கடனே அன்றோ
நித்திலமே திருநெல்லை நீயே காப்பு.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

காஞ்சி நகரில் தொடங்கி அங்குள்ள கச்சி ஏகம்பனை வழிபட்டுத் துதித்துப் பின் பல பதிகளையும் போற்றிப் பாடி வருகிறார் பட்டினத்தார். அதன் பிறகு சிவப்பதிகளின் தலைமைப் பதியான தில்லை என்றும் சிதம்பரம் என்றும் அழைக்கப்படுவதான கோவிலைப் பாடுகிறார்.

அதன்பின் இறைவன் மாதொரு பாகனாகக் காட்சி தரும் திருச்செங்கோடு என்ற திருத்தலத்தைப் பாடத் தொடங்குகிறார். அவருடைய எண்ணமெல்லாம் வீடுபேறு அடைய வேண்டும் என்பதே. ஆனால் அது நம்கையில் இல்லையே. சிவன் சித்தம் எப்படியோ அப்படித்தான் நடக்கும் என்பதில் மாறாத உறுதி கொண்டவராய் உள்ளார் என்பதே அவர் பாடல்களின் அடிநாதமாக ஒலிக்கின்றது.

சிவன் நெருப்பான மேனி உடையவன். திருச்செங்கோட்டில் ஆத்தி மர நிழலின் அடியில் இருப்பவன். அவன் திருவுள்ளம் என்ன நினைக்கின்றதோ அறியேன். இன்னும் எத்தனை தடவை என்னைத் தாயின் கருக்குழியில் விழச் செய்யுமோ ? அல்லது அந்த முக்கண்ணன் தன்திருப்பாதத்தை எனக்குக் காட்டுமோ? எல்லாம் இறைவன் திருச்செயலே அது எனக்குத் தெரியவில்லை.

**திருச்செங்கோடு**

***நெருப்பான மேனியர் செங்கோட்டில் ஆத்தி நிழல் அருகே***
***இருப்பார் திருவுருவம் எப்படியோ இன்னம் என்னை அன்னைக்***
***கருப்பசா யக்குழிக்கே தள்ளுமோ கண்ணன்காண் அரிய***
***திருப்பாத மேதருமோ? தெரியா(து) அவன்செயலே.***

**திருவொற்றியூர்**

அடுத்துத் தனக்கு முத்தித் தலமாக வர இருக்கின்ற திருவொற்றியூரைப் பாட வேண்டும் என்ற நினைவு வந்து பாடுகிறார். அவருடைய வாழ்வில் அதிக முக்கியத்துவம் பெற்ற தலம் திருவொற்றியூர். அன்னை வடிவுடைய நாயகி அவரை ஆட்கொண்ட

திருப்பதி. பசியால் வாடிய இரவில் அவர் முன்னே அவரது தமக்கையாகத் தோன்றி அன்னை வடிவுடையாள் அவருக்கு அன்னமிட்ட தலம். பட்டினத்தார் வாழ்வில் முக்கியமான இடம் பெற்ற தலம். அதனால் அத்தலத்தை அவர் விரிவாகப் பாடத் தொடங்குகிறார். அவருடைய எண்ணமெல்லாம் நிலையாமையைப் பற்றியே சிந்திக்கின்றது.

இறுதி வரும்போது உயிர்களுக்கு உண்டாகும் மரணபயம் பற்றிச் சிந்திக்கின்றார். வாத பித்த சிலேட்டும நாடிகளில் ஒன்றான சிலேட்டுமம் என்று சொல்லப் பெறுகின்ற சளி நாடி தொண்டைக்கு மேலும் கீழுமாக இழுக்கத் தொடங்கும். அந்த நேரம் கண்கள் செருகிக் கொள்ளும். அப்போது கொள்ளும் அறிவழிந்து மெய்யுடல் பொய்யுடல் ஆகிய போதில் இறைவா ! உன்னிடம் ஒன்று வேண்டுகிறேன். எனக்குத் திருநீறும் இட்டு என்னுடைய கைகளையும் தொழுமாறு செய்து உதவி எனக்குக் கற்பிக்க வேண்டும்.

*ஐயும் தொடர்ந்து விழியும் செருகி அறிவழிந்து*
*மெய்யும்பொய் ஆகி விடுகின்ற போதொன்று வேண்டுவன்யான்*
*செய்யும்திரு வொற்றியூர் உடையீர் ! திரு நீறும்இட்டுக்*
*கையும் தொழப்பண்ணி ஐந்தெழுத்(து) உதவவும் கற்பியுமே*

என்று பாடுகிறார். உயிரிழந்த உடல் தான் சுடப்படுவதை அறியார்.

அவர்கள் வாழும் போது முப்புரம் எரித்த பிரான் பெரிய மதில் சூழ்ந்த தென்னாட்டு ஒற்றியூரன் ஊராகிய அவ்வொற்றியூரனின் தெருப்பரப்பில் நடப்பவர் பொற்பாதம் தன்தலைமேல் பட மனமே நீ உருண்டு புரள வேண்டும். இதன் மூலம் நாம் நம்முடைய விதி ஏட்டைக் கிழிக்கின்ற வழியாகும். இதனைப் பற்றிய பாடல்

*சுடப்படு வார்அறி யார்புரம் மூன்றையும் சுட்டபிரான்*
*திடப்படு மாமதில் தென்ஒற்றி ஊரன் தெருப்பரப்பில்*
*நடப்பவர் பொற்பாதம் தம்தலை மேற்பட நன்(கு)உருண்டு*
*கிடப்பது காண்மன மேவிதி ஏட்டைக் கிழிப்பதுவே.*

அடுத்த திருத்தலம் பட்டினத்தடிகளின் வாழ்க்கையில்

பத்திரகிரியார் என்ற ஞானியை அறிமுகப்படுத்திய இடம். இடைமருதூர் உறையும் எந்தாய் போற்றி என்று மாணிக்க வாசகரால் போற்றப்பட்ட திருத்தலம் திருவிடைமருதூர்.

காட்டில் திரிந்து என்ன பயன் ? காற்றையே உணவாக உண்டு என்ன பயன் ? ஓட்டை எடுத்து என்ன பயன் ? உள்ளன்பு இல்லாத அடியர் மேலும் தேவர்கள் நாடாக விளங்கும் இடைமருது இறைவனுக்கு மெய் அன்பு இல்லாதவர் மெய்ஞ்ஞானம் மேவினால் அவர் வீட்டின்பத்தை அடைவர்.

*காடே திரிந்(து)என்ன? காற்றே புசித்(து)என்ன? கந்தைசுற்றி*
*ஓடே எடுத்(து)என்ன உள்ளன்(பு) இலாதவர் ஓங்குவிண்ணோர்*
*நாடே இடைமரு(து) ஈசர்க்கு மெய்யன்பர் நாரியர்பால்*
*வீடே இருப்பினும் மெய்ஞ்ஞான வீட்(டு)இன்பம் மேவுவரே.*

தாயும் பகையானாள்; கட்டிக் கொண்ட மனைவியும் பகையானாள். தான் பெற்ற பிள்ளையும் பகை. உறவினரும் பகை. இவ்வுலகமே பகை. நாம் ஆராய்ந்து பார்க்கும் போது நம்மிடமுள்ள அரிய செல்வம் நீங்கினால் இல்லாமை வரும். இவையெல்லாம் நாம் மருதீசர் பொற்பாதத்தை அடைந்தமையால் வந்த பயன் என்று உணருங்கள். இதோ பாடல்.

*தாயும் பகைகொண்ட பெண்ணும் பெரும்பகை தன்னுடைய*
*சேயும் பகைஉற வோரும்பகை இச்செக மும்பகை*
*ஆயும் பொழுதில் அருஞ்செல்வம் நீங்கினஇங்(கு) ஆதலினால்*
*தோயும்நெஞ் சேமரு தீசர்பொற் பாதம் சுதந்தரமே*

**திருக்கழுக்குன்றம்**

கழுகுருவில் வந்த முனிவர்களுக்கு முத்தி வழங்கிய இடம். காடு செடி கடல்புறம் நாடு நடுநகர் வீடு திண்ணைப்புறம் இவற்றில் எங்கேனும் விழுந்து கிடக்குமோ ? திருக்கழுக்குன்றில் இருக்கின்ற ஈசனே உன்பாதம் தான் எனக்கு உயிர்த்துணை.

*காடோ செடியோ? கடல்புறமோ ? கனமேமிகுந்த*
*நாடோ நகரோ? நகர்நடுவோ? தவமேமிகுந்த*
*வீடோ புறத்திண்ணையோ? தமியேன் உடல்விழுமிடம்*
*நீள்தோய் கழுக்குன்றில் ஈசா உயிர்த்துணை நின்பதமே*

வேடுவன் திண்ணனைக் கண்ணப்பன் ஆக்கிய சிவபெருமான் உறைகின்ற காற்றுத் தலமான திருக்காளத்தி இறைவனைத் துதிக்கத் தொடங்குகின்றார்.பத்துத் திங்கள் தாய் வயிறு நுழைந்து பின் பிறந்து வளர்ந்து பட்டாடை சுற்றி முத்தும் பவளமும் அணிந்து ஆடி ஓடி முடிந்தபின் செத்துக் கிடக்கும் பிணத்தருகே இனிமேல் சாக இருக்கின்ற பிணங்கள் கத்துகின்ற கணக்கு என்ன?சொல்வாய் காளத்தி இறைவனே !

*பத்தும் புகுந்து பிறந்து வளர்ந்து பட்டாடை சுற்றி*
*முத்தும் பவளமும் பூண்(டு)ஓடி ஆடி முடிந்தபின்பு*
*செத்துக் கிடக்கும் பிணத்தரு கேஇனிச் சாம்பிணங்கள்*
*கத்தும் கணக்(கு)என்ன காண்கரியிலாபுரிக் காளத்தியே*

பொன்னால் உண்டாகும் பயன் அப்பொன் பெற்றோர்க்கே உண்டு. பொன்படைத்தவனால் பொன்னுக்கு உண்டாகும் பயன்தான் யாது ? இறைவனே ! உன்னால் உண்டாகும் பயன் வேண்டுவன யாவும் கிடைப்பதே. ஆனால் உனக்கு என்னால் யாது பயன் ?

*பொன்னால் பிரயோசனம் பொன்படைத் தார்க்(கு)உண்டு*
*பொன்படைத்தோன்*
*தன்னால் பிரயோசனம் பொன்னுக்(கு) அங்(கு)ஏ(து)உண்டு*
*அத்தன்மையைபோல்*
*உன்னால் பிரயோசனம் வேண(து)எல்லாம் உண்(டு)*
*உனைப்பணியும்*
*என்னால் பிரயோசனம் ஏ(து)உண்டு? காளத்தி ஈச்சுரனே !*

இங்கே பட்டினத்தடிகள் பெரிய புராணம் கூறும் செயற்கரிய செய்த சிறந்த அடியவர்களைப் பற்றிச் சிறப்பித்துப் பாடுகிறார். அவர்கள் திரு நீலகண்டர் கண்ணப்பர் சிறுத்தொண்டர் ஆகியோரே. பரமாதரைச் சார்ந்தார் எனக்கருதி அவரை நோக்கி எம்மைத் தீண்டுவீராயின் என்று திருநீல கண்டத்தை ஆணை வைத்த மனைவிக்காக

எப்பெண்களையும் மனத்தால் கூடத் தீண்டாத திருநீலகண்டர் சிவனடியார் பசி தீர்க்கத் தன்மகன் சீராளனையே உணவாக்கிட மகவரிந்த சிறுத்தொண்டர். ஆறே நாள்களில் இறைவன்மேல் பற்றுக் கொண்டு தம் கண்ணைத் தோண்டி அப்பிய கண்ணப்பர் ஆகிய இவர்களைப் போல நான் திருக்காளத்தி அப்பனுக்கு எப்படி அடியவனாவேன்?

திருக்காளத்தி அப்பன் என்னைப் படைத்த காரணம் என்னவாக இருக்க முடியும்? என்று எண்ணிப் பார்க்கின்றார் பட்டினத்தார். நிலையாமையைக் கொள்கையாக உடையவர் அல்லவா பட்டினத்தார். ஆதலால் அவருக்கு அது தொடர்பான செய்திகளே அமைகின்றன. திருக்காளத்தி அப்பரை நோக்கி அவர் இவ்வாறு வேண்டுகிறார். திருக்காளத்தி இறைவா! காலை மாலை இரவுஎன முப்பொழுதும் அன்னம் உண்ணவும் மோக மிகுதியால் மாதருடன் சேரவும் உயிரை விடுகின்ற அந்தப் பொழுதில் கண்கள் கலங்கவும் வைத்திட்ட ஐயனே! நான் இனி எப்பொழுதும் உன்னைக் காண்பேன் என்று கேட்கின்றார்.

*முப்போதும் அன்னம் புசிக்கவும் தூங்கவும் மோகத்தினால்*
*செப்போ(து) இளமுலை மாதருடன் சேரவும் சீவன்விடும்*
*அப்போது கண்கலக் கப்படவும் வைத்தாய் ஐயனே!*
*எப்போது காணவல் லேன்/ திருக்காளத்தி ஈச்சுரனே!*

பொன்முகலி ஆற்றின் அருகே உள்ள கல்லால மரத்தின் கீழே அமர்ந்துள்ள ஈசனே! திருக்காளத்தியே! இரை பெறுவதற்காகவே இரவும் பகலும் விடாது அலைந்து திரிந்தேன். இவ்வாறு உண்டும் பெண்டிர் போகத்தே ஈடுபட்டு உழன்றேன். இவ்வாறு உழலும் தமியேனைக் காத்தருள வேண்டும்.

*இரைக்கே இரவும் பகலும் திரிந்(து) அங்(கு) இளைத்து மின்னார்*
*அரைக்கே அன்னக் குழியருகே அசும்(பு) ஆர்ந்(து) ஒழுகும்*
*புரைக்கே உழலும் தமியேனை ஆண்(டு) அருள் பொன்முகலிக்*
*கரைக்கே கல்ஆல் நிழல்கீழ் அமர்ந்(து) அருள் காளத்தியே!*

அடுத்து நம் உடம்பு எத்தகையது என்ற விளக்கத்தை நமக்குக்காட்டுகிறார் பட்டினத்தார். புலால் நாறும் இரத்தத்தை உடையது. மலமும்

சிறுநீரும் நாறுகின்ற சலதாரை அதிலே மலமும் நீரும் இடைவிடாமல் ஊறிக்கொண்டிருக்கிறது. அது காமத்தின் துவாரம். இதனால் சிற்றின்பம் ஒன்றையே எண்ணிக் கிடக்கும் இந்த உடம்பைச் சார்ந்த உயிருக்கு நல்ல மேலான வீட்டின்பத்தை நல்குவாய் காளத்தி அப்பனே! என்று வேண்டுகிறார். இதன்வழி உடல் நிலையானது அல்ல. வெறும் காற்று அடைத்த பை. சதை இரத்தம் மாமிசம் மலம் சிறுநீர் கலந்த சிறுகுடில் என்று சொல்வதன் மூலம் உடம்பின் அவலம் விளங்கும்.

*நாறும் குருதிச் சலதாரை நாள்தொறும் சீ*
*ஊறும் மலக்குழி காமத் துவாரம் ஒளித்திடும்புண்*

*என்று பாடுகிறார்.*

(தொடரும்....)

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)
## திருநகரம் கண்டது

தெய்வத்தன்மை பொருந்திய கடம்பவனத்தின் கிழக்குப் பகுதியிலே மணவூரில் பாண்டியர் குல திலகமான, மன்னர் மன்னன் குலசேகரன் செங்கோல் வழுவாது ஆண்டுவந்தான். அக் காலத்தில் அவ்வூரிலே தனஞ்சயன் என்ற வணிகன் வாழ்ந்து வந்தான். அவன் பொருட் செல்வத்தைப் பெருக்குவது போலவே அருட்செல்வத்தையும் தேடிப் பெருக்குவதில் அக்கறை கொண்டவன். சிவ புண்ணியச் செயல்களைப் புரிந்து வந்தவன். சிவபக்திச் செல்வன்.

மேற்குப் பக்கத்திலிருந்த பல ஊர்களில் வியாபாரம் செய்து முடித்துக்கொண்டு ஒரு சமயம் தனஞ்சயன் திரும்பிவந்து கொண்டிருந்தான். வரும் வழியிலே கடம்ப வனத்துள் புகுந்துவிட்டான். அப்போது அந்திமயங்கிய நேரம். இருள் பரவிச் சூழத் தொடங்கியது. இருளிலே தனியனான. தனஞ்சயன் வருந்தி மனஞ் சோர்ந்தான். ஆனால் அவ்விடத்திலே ஒளி பொந்திய விமானம் இருப்பதையும் அதனை எட்டு யானைகள் தாங்கி நிற்பதையும் நேரிலே கண்டு பெரு வியப்புக் கொண்டான். அருகே சென்று கண்டபோது சொக்க லிக்கமூர்த்தி எழுந்தருளியிருப்பது தெரிந்தது. அந்த திவ்ய

மூர்த்தியைத் தரிசித்து வணங்கி வழிபட்டு அவ்விரவை அங்கேயே கழிக்க நினைத்திருந்தான்.

அன்றிரவு நன்றிரவான சோமவார இரவாகும் ஆனபடியால், தேவர்கள் வந்திருந்து சொக்கலிங்கப் பெருமானை வணங்கி, சிவராத்திரியை நிகர்த்து, நான்கு ஜாமங்களிலும் விசேஷ பூஜை செய்தனர். சோமசுந்தரப் பெருமானின் திருவருள் கூட்டியதால் தனஞ்சய வணிகனுக்கும் கிடைப்பதற்கரிய தேவகாட்சி கிட்டியது. தவிரர் தனது கையினாலேயே சிவபூஜைக்குரிய கஸ்தூரி, பன்னீ ஆகிய வாசனைப் பொருள்களைத் தேவர்களிடம் கொடுக்கும் பேறும் பெற்றான். பொழுது விடிந்ததும் தேவர் குழாம் மறைந்தது. தனித்து எழுந்தருளியிருக்கும் சொக்கலிங்கப் பெருமானைக் கண்ட தனஞ்சயன் பேரதிசயம் அடைந்தான். பெருமானின் திருவடிகளில் விழுந்து வணங்கி எழுந்து வலம் வந்தான். பின்னர்த் தன் மணவூர் வந்து சேர்ந்தான்.

வியப்பாலும் உவகையாலும் உந்தப்பட்ட வணிகள் தனஞ்சயன் அரசன் குலசேகர பாண்டியன் முன்னிலை அடைந்தான். மன்னவா மன்னவா ! கடம்ப வனத்திலே நேற்றிவு பேரதிசயம் கண்டேன். வனத்துள் பேரொளி தெறிக்கும் திவ்ய விமானமும், அதனுள் சிவலிங்கம் எழுந்தருளியிருப்பதையும் கண்ணாரக் கண்டேன். தேவர்கள் யாவரும் வந்திருந்து நான்கு ஜாமங்களிலும் நியம நிஷ்டைகளோடு பூசை இயற்றிச் சென்றனர். விடிந்தவுடன் நானும் வந்து விட்டேன் என்று பகன்றான். தனஞ்சயன் வாயிலாகப் புதுமைச் செய்தியைக் கேட்ட குலசேகரன் சிவபெருமானின் சேவடிகளைச் சிந்தித்துக் கைகளைச் சிரமேற் கூப்பிக்கொண்டான், பக்தியும் விசித்திரமும் நிரம்பிய உள்ளத்தோடு பொழுது போக்கினான். அன்றிரவு சிவபெருமான் குலசேகர பாண்டியனின் கனவிலேசித்தரைப்போன்று தோன்றி, வேற் பாண்டிய ! கடம்பவனக் காட்டினைத் திருத்தித் திருநகரம் ஒன்று காண்பாயாக ! என்று ஆணைச் சொல்லருளி மறைந்தார். குலசேகர மன்னனுக்கு இரவு முழுவதும் படுக்கை கொள்ளவில்லை.

சூரியோதயம் ஆயிற்று. கனவின் பசுமை உள்ளத்திலே இலங்க நித்தியகருமங்களை முடித்துக்கொண்டான். மந்திரிமார்களையும் தவதிருஷ்டிகளையும், அழைத்தான். பகலில் வணிகனிடம் கேட்டதையும் இரவில் கனவிலே கண்டதையும் தெளியச் சொன்னான். பிறகு நன்னிமித்தம் தேர்ந்து மேற்குத் திசையை நோக்கிப் புறப்பட்டான். உரிய நேரத்தில் தனது பரிவாரங்களோடு கடம்ப வனத்தை அடைந்தான் குலசேகரன். பொற்றாமரைத் தடாகத்திலே நீராடி எழுந்தான். விமானத்தின் அகத்தே கோயில் கொண்டு எழுந்தருளும் சோமசுந்தரப் பெருமானைக் கண்ணாரக் கண்டான். தரிசனம் செய்து கரங்களைச் சிரமேற் கூப்பி வணங்கினான். இன்பப் பெருக்கால் நெக்குருக இறைவன் திருவடிகளில் விழுந்து பணிந்தான். சிவபெருமானை நோக்கி எந்தையே ! விண்ணுக்கொரு மருந்தும், வேதவிழுப் பொருளுமான நீ எங்கள் பால் அன்பு பூண்டு இக்கானகத்தே எழுந்தருளினாயோ எனப் பலவாறு போற்றி செய்து ஆனந்த பாஷ்பம் ஈடுபட்டு மந்திரிமார்களைக் கலந்து ஆலோசித்து பெருக வலம் வந்தான். பின்னர் அமைச்சர்களோடு ஓரிடத்திலே புறம்பாக இருந்தான்.

பாண்டியப் பேரரசனது ஆணையால் மந்திரிமார்கள் பல ஏவலாட்களைப் பல இடங்களுக்கு அனுப்பிப் பல் வகை தொழிலாளர்களை அழைத்து வருமாறு பணித்தனர். நெடுங்காட்டைத் திருத்தி அழகிய நகரம் ஆக்கும் திருப்பணியில் ஈடுபடும் பொருட்டுப் பல்லாயிரக்கணக்காகத் தொழிலாளர் வந்து மண்டினர். காடு விரைவில் அழிக்கப்பட்டது. நகரம் காண்பதற்கான பெரிய இடம் சமநிலமாக அமைந்து விட்டது. இடம் கண்ட பாண்டியன் நகரம் அமைப்பது எப்படி என்ற பிரச்னையிலே கொண்டிருந்தான். அந்த நேரத்திலே சிவபெருமான், முன்பு பாண்டியனது கனவில் எழுந்தருளிய படிக்கே, சித்தராக நேரில் எழுந்தருளினார். சித்தர் பெருமானைக் கண்ட பாண்டியன் குலசேகரன் எழுந்து வணங்கி வரவேற்றான். சிவாகமத்தின் வழியே தோன்றிய சிற்ப சாஸ்திர முறைப்படி ஆலயம் மண்டபம், கோபுரம், நகரம் எந்த முறையில் அமைதல் வேண்டும் என இயம்பியபின் மறைந்தருளினார். சித்தர்

பாண்டியன் பல சிற்பநூல் வல்ல ஸ்தபதிகளைத் தருவித்தான். சிவபரஞ் சுடராகிய சித்தமூர்த்திகள் அருளிய வண்ணமே திருக்கோயிலும் திருநகரமும் காண்பதில் ஈடுபட்டான். வேத பத்ம மண்டபம், யாகசாலை பரிவார தேவர்களின் கோயில்கள், பிராகரணங்கள், கோபுரங்கள், மதில்கள் எல்லாவற்றையும் சாஸ்திர விதிப்படி தேர்ந்து திருக்கோயில் எடுப்பித்தான்.

சோமசுந்தரப் பெருமானின் திருப்ருெங் கோயிலை நடு நாயகமாக வைத்துக்கொண்டு பல திருவீதிகளை அமைத்தனன் பாண்டியன். அம்பலங்கள், நாடகசாலைகள், சைவமுனிவர் தங்குமடங்கள், கல்விச் சாலைகள், தருமசாலைகள், முதலானவற்றைச் சிறப்பாக அமைப்பித்தான். நகருக்கு அழகுதரும் பலவகைச் செயல்களைச் செய்வித்தான். அத் திருப்பெருநகரின் வடக்கிலே தனக்கென ஓர் அரண்மனையும் கட்டிக் கொண்டான் குலசேகரன்.

நன்னகரை எடுப்பித்த பின்னர் பாண்டியன் சாந்தி செய்யக் கருதினான். அஃதுணர்ந்த சோமசுந்தரப் பெருமான் தனது சடாமுடியில் உள்ள சந்திர கலையின் புத்தமுதத்தைச் சிறிதே சிந்தியருளினார். அவ் வமுதத்துளி நகர் முழுவதும் அமுதமயமாக்கித் தூய்மை செய்துவிட்டது. சிவனருளிய மதுரமான அமுதத்தால் சாந்தியுள்ள அத்திருநகர் மதுராபுரி என்று வழங்குவதாயிற்று. பின்னர் ஊருக்குப் பெருங் காவலாக இருக்குமாறு கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்னும் நான்கு திசைகளிலும் முறையே ஐயனார், சப்தமாதர்கள், மகாவிஷ்ணு, பத்திரகாளி ஆன தெய்வங்களைப் பிரதிஷ்டை செய்தான் பாண்டியன் குலசேகரன்.

சிவாகம விதிப்படி சிவபூஜையானது ஆறு காலங்களிலும் வழுவாது நடைபெறும் பொருட்டுவேதாகமங்களில் சிறந்த முனிவர்களையும், பிராமணர்களையும் காசி சேஷத்திரதிலிருந்து அழைத்து வந்து மதுரையம்பகுதியில் நிலைபெறச் செய்தான் பாண்டியன். வேதநெறியும், சிவநெறியும், தர்மநெறியும் மதுரை மாநகரத்தில் செழித்தோங்கின. பாண்டியப் பெரு நாட்டின் திலகம் எனத் துலங்கிடும் வண்ணம் மதுரைப் பதியைச் சிறப்புறச் செய்தான்,

குலசேகர பாண்டியன். சிவநேசச் செல்வனான குலசேகர பாண்டியன் பன்னெடு நாள் இனிதே வாழ்ந்திருந்து, நீதி வழுவா நெறிநின்று, பட்டாங்கில் உள்ளபடி செங்கோல் ஓச்சினான். உரியவயதடைந்த தன்மகன் மலயத்துவசன் வசம் தனது அரசியலை ஒப்படைத்து விட்டுச் சிவபதவியடைந்தான் குலசேகர வேந்தன்.

*(ஆதாரம் : புலவர் மணி எழுதிய திருவிளையாடற்புராணம் வசனம்)*

*(தொடரும்...)*

## காரைக்கால் அம்மையார் திருமுறைச் சிந்தனை

(புலவர். ஆறு.மெ. மெய்யாண்டவர், காரைக்குடி)

இறைவன் ஒருவனே, அவன் அருளே வடிவானவன், அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையவன், இறையருள் நெறியை இயம்பும் சமயங்களும் மிகத் தொன்மையானவை சில, அவற்றுள் இங்கே குறிக்கப்படுவன இரண்டு. ஒன்று சமணம், மற்றொன்று சைவம். இவை பண்டை நாளில் ஒன்றாய் இருந்து பின் பல காரணங்களால் பிரிந்திருத்தல் வேண்டும். சமணர்கள் ஆதிமெய்க்குரவராகிய இடபதேவரும் சைவர்கள் சொல்லும் தேன்முகப் பரமாச்சாரியர் ஆகிய ஸ்ரீ கண்டர் எனும் தெட்சிணாமூர்த்தியும் ஒருவரே என இருசமய நூல்களையும் ஆராய்ந்தோர் கூறுவர். சமணர்கள் தங்கள் இறுதிப் பேற்றைச் சிவகதி என்கிறார்கள். சீவகசிந்தாமணியில் சீவகன் சிவகதி அடைந்தான் என்றே வருகிறது. சைவர்களும் இறுதிப் பேற்றைச் (வீடுபேறு அல்லது முக்தி) சிவகதி என்றே சொல்கிறார்கள். சிவமே செம்பொருள் என்கிறது சைவசித்தாந்தம், இவையாவும் தமிழ்த்தென்றல் திரு.வி.க.வின் ஆய்வுரையில் சில கூறுகள்.

பெண் பிறவிக்கு வீடுபேறு இல்லை என்ற பழைய மூடக் கொள்கைகளை உடைத்துச் சைவத்தில் காரைக்காலம்மையாரும் வைணவத்தில் ஆண்டாள் நாச்சியாரும் தம் கொள்கைகளை முறையே அமிழ்தினும் இனிய தமிழ்ப் பதிகங்களாலும் பாசுரங்களாலும் நிறுவி வென்றனர்.

அத்தகையோரில் காரைக்காலம்மையார் மூத்தவர். அறுபத்து மூன்று நாயன்மார்களுக்கும் மூத்தவர். அதனால் மூத்த திருப்பதிகம் கண்டவர். பிறவா யாக்கைப் பெரியோன் என இளங்கோவடிகளால் போற்றப்பெற்ற சிவபெருமானே அம்மையே என்றழைத்த காரைக்காலம்மையார் பதிகங்கள் ஒருசிலவற்றை ஈண்டுக் காண்போம்.

காரைக்காலில் தோன்றியவர்; இயற்பெயர் புனிதவதி. அறநெறியில் வாழும் பெருவணிகர் குலத்தில் தோன்றிய தெய்வமலர், தனதத்தர் பெற்றெடுத்த தவப்புதல்வி. நாகப்பட்டினத்தில் நிதிபதி எனும் பெரும் வணிகர் பெற்றெடுத்த புண்ணிய சீலர் பரமதத்தர், இருவருக்கும் இருபெற்றோரும் சுற்றமும் சூழ மனம் உவந்து மணம்புரிந்து இருவர்க்கும் காரைக்காலிலேயே ஓர் அழகு மாளிகை அமைத்து இல்லறம் நடத்த உதவினர். புனிதவதி இயல்பாகவே சிவநெறியே தவநெறியாய்க் கொண்டு வாழ்ந்து வருபவர். இந்நிலையில் பரம தத்தருக்கு வணிகத் துறைசார்ந்த அன்பர்கள், இருமாங்கனிகள் தந்தனர். கணவர் பரமதத்தர் வரும் முன்பே சிவனே அடியவராய் வர அம்மை அவருக்கு அமுது படைக்கும் போது மாங்கனி ஒன்றை வைத்தார். அடியார் சுவைத்து மகிழ்ந்து சென்றார். பரமதத்தர் இல்லம் வந்தார். அவருக்கு அமுது படைத்தார். ஒரு மாங்கனியை வைத்தார். அவர் மீண்டும் ஒருகனி கேட்டார். புனிதவதி கணவரிடம் உண்மை கூற அஞ்சிச் சிவனையே கெஞ்சி இறைஞ்ச, சிவனருளால் ஒரு மாங்கனி கிடைக்க அதைக் கணவர்க்குப் படைத்தார். பரமதத்தர் தாம் வாங்கிவந்த கனி அன்று இது என்று கண்டார். புனிதவதியிடம் விளக்கம் கேட்க அவர் சிவனருளால் கிடைத்தது என உண்மைகூற, அவ்வாறாயின் இன்னொரு மாங்கனி பெற்று வருக எனப் பரமதத்தர் கூறச் சிவனருளால் மாங்கனி வர அதைப் புனிதவதியார் கணவர் கையில் தர கனி மாயமாய் மறையப் பரமதத்தர் இவர் தெய்வப் பிறவி என உணர்ந்தார். இரவோடு இரவாகப் பாண்டி நாட்டுக்குச் சென்று அங்கோர் நகரில் தங்கி வேறொரு பெண்ணை மணந்தார். பிறந்த பெண் மகவுக்குப் புனிதவதி என்றே பெயரிட்டு வாழ்ந்து வந்தார். புனிதவதியாரை அழைத்துக்கொண்டு தனவணிகர் பெருமக்கள் பாண்டி நாட்டில் பரமதத்தரைக் கண்டு அவரிடம் காரைக்காலம்மையார் ஆகிய புனிதவதியாரை ஏற்றுக்கொள்ள வேண்டினர். அப்பொழுது

பரமதத்தர் மானுடம் இவர்தாம் அல்லர் நற்பெருந்தெய்வம் ஆவார், ஆதலால் இவர் பெயரை எம்மகளுக்கு இட்டேன், எனப் பரமதத்தரும் அவரது இன்னொரு துணைவியாரும், புனிதவதி எனும் பெயர் பூண்ட புதல்வியும் ஒருசேர அவரை வணங்கினர். புனிதவதியார் தம் கணவரால விரும்பப்படாத இவ்வுடம்பு வேண்டா. பிறர் வெறுக்கும் பேய்வடிவம் வேண்டினார். இப்பொழுது காரைக்காலம்மையார் ஆனார். அவர் பேய் உடம்பு பெற்றபோது பாடிய பதிகம். திருவாலங்காட்டில் பாடியருளியது. ஞானசம்பந்தர் பாடியருளிய தோடுடைய செவியன் எனும் பதிகத்திற்கு முற்பட்டது. தலையால் நடந்துசென்று வணங்கினார்; இப்பதிகமே அம்மையார் முதலில் பாடிய மூத்த திருப்பதிகம். அப்பதிகம் இதுதான்.

" *கொங்கை திரங்கி நரம்பெழுந்து*
*குண்டுகண் வெண்பற் குழிவயிற்றுப்*
*பங்கி வந்திரு பற்கள் நீண்டு*
*பரடுயர் நீள்கணைக்கால் ஓர்பெண்பேய்*
*தங்கி யலறி யுலறுகாட்டில்*
*தாழ்சடை யெட்டுத்திசையும் வீசி*
*அங்கங் குளிர்ந்தனலாடு மெங்கள்*
*அப்பனிடம் திரு ஆலங்காடே* "

என்ன அற்புதமான தமிழ், காரைக்கால் அம்மையார் அருந்தமிழ் வல்லார் என்பதும் சிவன்பாலே சிந்தை வைத்தவர் என்பதும் அதனால் விளங்குகிறதன்றோ? மார்பகங்கள் வற்றி நரம்புகள் வெளியே தெரியுமாறு எலும்பும் தோலுமாய் குண்டு குண்டான கண்கள் குழி விழுந்த கண்களாய் இருபற்கள் நீண்டு (வெளியே நீட்டிக்கொண்டு இருத்தல்) கணுக்கால் நீண்டு பாதங்கள் எலும்பு தெரியுமாறு பெண்பேயாய்த் தங்கி இருக்க அப்படிப்பட்ட இடுகாட்டில் தாழ்ந்த சடை எட்டுத்திசையும் வீசி உடம்பு குளிர நெருப்பில் ஆடும் எங்கள் அப்பன் உறைவிடம் திருவாலங்காடே எனப்பாடுகிறார்.

காரைக்காலம்மையார் தலையினால் திருக்கயிலாயம் நடந்து சென்று சிவனடி குறுகல், பரமன் பார்வதியிடம் வரும் இவள் நம்மைப்

பேணும் அம்மைகாண் உமையே மற்றிப் பெருமைசேர் வடிவம் வேண்டிப் பெற்றனள் என்றான் (பேய்வடிவம்). பரமன் அம்மையே எனக் காரைக்காலம்மையார் அப்பா என்று சிவனின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினார். அப்பொழுது காரைக்காலம்மையார் வேண்டுவதாய்ச் சேக்கிழார் பாடும் பதிகம் இதுதான்.

*இறவாத இன்ப அன்பு வேண்டிப் பின் வேண்டுகின்றார்*
*பிறவாமை வேண்டும் : மீண்டும் பிறப்புண்டேல் உன்னை என்றும்*
*மறவாமை வேண்டும் : இன்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி*
*அறவாநீ ஆடும் போதுன் அடியின்கீழ் இருக்க என்றார்*

இவ்வாறு அம்மையார் சிவனடியின் கீழ் இருந்து பாடியவையே. 1. திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் 2. திருவிரட்டை மணிமாலை 3. அற்புதத்திருவந்தாதி ஆகியவை இவர் பாடிய நூல்கள். மூத்த திருப்பதிகம் 11 பாடல்கள். திருவிரட்டை மணிமாலை 20 பாடல்கள். அற்புதத்திருவந்தாதி 101. பாடல்கள் மொத்தம் 132 பதிகங்கள் இவர் பாடியுள்ளார். பின் வரும் அற்புதத்திருவந்தாதியில் இரு பதிகங்களைப் பார்ப்போம். முதற்பதிகத்தில் காரைக்கால் அம்மையார் இவ்வாறு தம் பிறப்பையும் வளர்ந்த முறையையும் உரைக்கின்றார்.

பிறந்து பேசும் தமிழ்மொழியைப் பயின்றபின் நின்பால் பக்தி கொண்டு நின் சேவடியே இடைவிடாது நினைத்தேன். கருநீலநிறக் கண்டம் உடைய தேவர்கள் போற்றும் பெருமானே! என்று என் பிறவித் துயரைத் தீர்க்கப்போகிறாய் என்கிறார். அந்த வெண்பாப் பதிகம் இதோ.

*பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்*
*சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன் - நிறந்திகழும்*
*மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே*
*எஞ்ஞான்று தீர்ப்ப திடர்.*

அடுத்து அம்மையார் தன்னம்பிக்கையோடு பாடிய பதிகம் ஒன்று இதோ.
*யானே தவமுடையேன் என்னெஞ்சே நன்னெஞ்சம்*
*யானே பிறப்பறுப்பா னெண்ணினேன் - யானேயக்*
*கைம்மா வுரிபோர்த்த கண்ணுதலான் வெண்ணீற்ற*
*அம்மானுக் காளாயி னேன்.*

அம்மையார் தானே தவமுடையவள் தன்னெஞ்சமே நல்நெஞ்சம், தானே பிறப்பை நீக்க எண்ணி யானைத்தோல் போர்த்த சிவனுக்கு அடியவள் ஆனதாய்க் கூறுகிறார்.

சிவன் எனக்கு என்றும் இனியவன், மனத்துக்கு இனிய வைப்புநிதி; அவனே என் தலைவன்; எனவே எனக் கரிய செல்வம் சிவமன்றி வேறில்லை என்கிறார்.

*எனக்கினிய எம்மானை யீசனை யானென்றும்*
*மனக்கினிய வைப்பாக வைத்தேன் - எனக்கவனைக்*
*கொண்டேன் பிரானாகக் கொள்வதுமே யின்புற்றேன்*
*உண்டே யெனக்கரிய தொன்று*

இத்தகைய அற்புதத்திருவந்தாதிப் பதிகவெண்பாக்களைப் பரவுவார் நலம் பெறுவார் எனக்கூறும் நிறைவுப் பதிகம் இதோ,

*உரையினால் இம்மாலை யந்தாதி வெண்பாக்*
*கரைவினாற் காரைக்காற் பேய்சொற் - பரவுவார்*
*ஆராத வன்பினோ டண்ணலைச்சென் றேத்துவார்*
*பேராத காதல் பிறந்து*

இந்த அற்புதத் திருவந்தாதி வெண்பாமாலைகளை அதாவது காரைக்கால் பேய் (காரைக்காலம் மையார்) செய்த இப்பதிகங்களைப் பாடுவார் நீங்காத அன்போடு இறைவனாம் சிவபெருமானை என்றும் ஏற்றிப் போற்றுவார் என்று கூறுகிறார். எத்தகைய தன்னம்பிக்கை நிறைந்த சொற்கள் இவை? எண்ணிப்பார்க்க வேண்டும்.

காரைக்காலம்மையார் பாடிய இப்பதிகங்கள் மூலம் நகரத்தார் குலத்தில் தோன்றியநற்குணப் பெண்டிர்கள் முற்காலத்தில் கல்வி கேள்விகளிற் சிறந்து விளங்கினார்கள் என்பதும் தத்துவஞானத்தில் தலைசிறந்தவர்களாயும் தமிழ்ப்புலமை மிக்கவர்களாயும் தெய்வப் பெண்டிர் போற்சிறந்து விளங்கினர் என்பதும் இனிதே விளங்கும்.

**வாழ்க காரைக்காலம்மையார் புகழ்.**

## திருக்குறள் - பாயிரம்

(ம. கார்மேகம்)

### நீத்தார் பெருமை - முற்றும் துறந்தவர்களின் பெருமை

1. **ஒழுக்கத்து நீத்தார் பெருமை விழுப்பத்து**
**வேண்டும் பனுவல் துணிவு**

ஒழுக்கத்து - இயல்பான வாழ்க்கைப் பற்று முறையில்; நீத்தார் - நீங்கிய சான்றோர்; பெருமை - பெருமையை; விழுப்பத்து - மிகச்சிறந்த வற்றுள்;வேண்டும் - விரும்பும் ; பனுவல் - நூல் ; துணிவு - தெளிவு, உறுதி.

இயல்பான வாழ்க்கைப் பற்று முறையிலிருந்து நீங்கி உயர்ந்த சான்றோரது பெருமையை மிகச் சிறந்தவற்றுள் சிறப்புடையது என்று விரும்பிப் போற்றுதல் எல்லா நூல்களிலும் சொல்லப்படும் உறுதியாகும்.

நீத்தார் - வினையால் அணையும் பெயர்

2. **துறந்தார் பெருமை துணைக் கூறின் வையத்து**
**இறந்தாரை எண்ணிக் கொண்டற்று.**

துறந்தார் - வாழ்க்கைப் பற்றிலிருந்து நீங்கியவர் ; பெருமை - பெருமை ; துணை - அளவு ; கூறின் - கூற எண்ணினால் ; வையத்து - உலகத்தில் ; இறந்தாரை - பிறந்து வாழ்ந்து இறந்தவர்களை ; எண்ணிக் கொண்டற்று - எண்ணிப் பார்த்துக் கொள்ள முயல்வது போலாகும்.

இவ்வுலக வாழ்க்கைப் பற்றிலிருந்து நீங்கியவர்களின் பெருமையை அளவிட்டுக் கூற இயலாது ; அவ்வாறு அளவிட முயல்வது இவ்வுலகில் பிறந்து வாழ்ந்து இறந்தவர்களின் எண்ணிக்கையை அளவிட்டு அறிய முயல்வது போல் ஆகும்.

3. **இருமை வகைதெரிந்து ஈண்டுஅறம் பூண்டார்**
**பெருமை பிறங்கிற்று உலகு**

இருமை - பிறப்பு, வீடு என்னும் இரண்டு ; வகைதெரிந்து -

அவற்றின் கூறுபாட்டை அறிந்து ; ஈண்டு- இப்பிறப்பில் ; அறம்பூண்டார் - துறவு கொண்டார் ; பெருமை - பெருமை ; பிறங்கிற்று உலகு - உலகத்தில் உயர்ந்தது.

இம்மை (இப்பிறவி) , மறுமை (வீடுபேறு) என்னும் இரண்டைப் பற்றியும் நன்றாக அறிந்து அதனால் இப்பிறப்பில் துறவுமேற் கொண்டோர் (பற்று நீங்கியோர்) பெருமைதான் உலகத்தில் உள்ள பெருமைகளில் எல்லாம் உயர்ந்தது. மற்ற துறவுகள் சிறப்பில்லை என்பதாம்.

இம்மூன்று குறள்களிலும் நீத்தார் பெருமையே உயர்ந்தது என்பதை வள்ளுவர் உணர்த்துகிறார்.

**4. உரன் என்னும் தோட்டியான் ஓர்ஐந்தும் காப்பான்**
**வரன் என்னும் வைப்பிற்கோர் வித்து.**

உரன் என்னும் - மனவலிமை என்கின்ற ; தோட்டியான் - தோட்டி எனப்படும் அங்குசத்தால் ; ஓர் ஐந்தும் - மெய், வாய், கண், மூக்கு, செவி யாகிய ஐந்தையும் ; காப்பான் - உணர்வுகள்வழிச் செல்லாமல் காப்பவன்; வரன் என்னும் வைப்பிற்கு - வீடு பேறு என்னும் வைப்பிற்கு ; ஓர் வித்து - ஒரு விதை.

மெய், வாய், கண், மூக்கு, செவி, என்னும் ஐந்து பொறிகளையும் அவற்றின் உணர்வுகளின் வழிச் செல்லவிடாமல் மனவலிமை என்கின்ற அங்குசத்தால் காப்பவன் வீடுபேறு என்னும் வைப்புக்கு விதையாவான். வீடு பேற்றுக் குரியவன் என்பது கருத்தாகும். இந்நிலத்து விதையாக மாட்டான்.

தோட்டியான் - ஆன் - மூன்றாம் வேற்றுமை உருபு . ஓர் ஐந்தும் - முற்றும்மை ; காப்பான் - வினையால் அணையும் பெயர்.

**5. ஐந்து அவித்தான் ஆற்றல் அகல்விசும்பு ளார்கோமான்**
**இந்திரனே சாலும் கரி.**

ஐந்து அவித்தான் - ஐந்து பொறிகளின் வழிச் செல்லும் உணர்வுகளை அடக்கியவன் ; ஆற்றல் - வலிமை ; அகல் - அகன்ற ;

விசும்புளார் - வானிலுள்ள தேவர்கள் ; கோமான் இந்திரனே - இறைவனாகிய இந்திரனே; சாலும் - பொருத்தமான : கரி - சான்று, சாட்சி.

ஐந்து பொறிகளின் வழிச் செல்லும் உணர்வுகளை அடக்கியவன் வலிமையை அறிந்து கொள்வதற்குத் தேவர்களின் இறைவனாகிய இந்திரனே சான்றாவான்; புலன் அடக்கம் இல்லாததால் இந்திரன் சாபம் பெற்றான் ; புலன் அடக்கிய முனிவரின் வாக்கு வலிமை வென்றது.

இந்திரனே - ஏகாரம் தேற்றேகாரம்.

6. செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர்
செயற்கரிய செய்கலா தார்

செயற்கரிய - எவராலும் செய்வதற்கு அரிய செயல்களை; பெரியர் செய்வார் - இவ்வுலகப்பற்றை நீத்தவராகிய சான்றோர் செய்வர் ; சிறியர் - இவ்வுலகப் பற்றிலிருந்து விடுபடாதவர் ; செய்கலாதார் - செய்ய இயலாதவர் ஆவர்.

இவ்வுலகப் பற்றை நீத்தவராகிய சான்றோர் பிறரால் செய்ய முடியாத அரிய செயல்களையும் செய்யும் ஆற்றல் மிக்கவர்கள் ; மற்றவர்கள் அந்த அரிய செயல்களைச் செய்ய இயலாதவர் ஆவார்கள்.

7. சுவைஒளி ஊறுஓசை நாற்றம்என் றைந்தின்
வகைதெரி வான்கட்டே உலகு.

சுவைஒளி ஊறுஓசை நாற்றம் என்றைந்தின் - ஐந்து புலன் உணர்வுகளின்; வகை - கூறுபாடு; தெரிவான் - ஆராய்ந்து தெளிந்தவன்; கட்டே - கண்ணதே ; உலகு - உலகம்.

ஐந்து பொறிகளின் வழியாகத் தோன்றும் ஐந்து உணர்வுகளின் கூறுபாடுகளையும் அவற்றின் விரிவுகளையும் ஆராய்ந்து தெளிந்தவனிடத்திலேதான் இந்த உலகம் உள்ளது. இந்த உலகம் அவன் சொல்லும் வழியில் செல்லும் என்பது பொருள்.

இவை நான்கு பாடல்களால் ஐந்து அவித்தலே நீத்தார் பெருமைக்குக் காரணமாகும் என்பதைச் சொல்கிறார்.

8. **நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து**
**மறைமொழி காட்டி விடும்**

நிறைமொழி – நிறைந்த சொற்கள் ; மாந்தர் பெருமை – நீத்தார் பெருமை; நிலத்து – உலகத்தில்; மறைமொழி – மந்திரச் சொற்கள் ; காட்டிவிடும் – தெளிவாகக் காட்டிவிடும்.

பயன்நிறைந்த சொற்களைக் கொண்ட நீத்தாரதுபெருமையை இந்த உலகத்தில் அவர்கள் சொல்லிய மந்திரச் சொற்களே தெளிவாகக் காட்டிவிடும். அவர்களின் சொற்கள் அவற்றிற்குரிய பயன்களைத் தந்துவிடும்.

9. **குணம்என்னும் குன்றேறி நின்றார் வெகுளி**
**கணமேயும் காத்தல் அரிது**

குணம் – துறவு ஆகிய குணம்; என்னும் – என்கின்ற; குன்றேறி – உயர்ந்த உச்சியின் கண் ஏறி ; நின்றார் – நிற்பவராகிய நீத்தார்கள் (துறவிகள்) வெகுளி – சினம்; கணமேயும் – ஒருகணம் கூட; காத்தல் – தடுத்துவிடுதல் – ; அரிது – அரிதாகும்.

உலகப்பற்றை நீத்த துறவு ஆகிய குணம் என்கின்ற குன்றின் உச்சியில் நிற்பவராகிய துறவிகளின் சினத்தை ஒருகணத்தில் தடுத்துவிடுதல் இயலாது. யார்மீது சினம் சென்றதோ அவர்களால் தடுக்கமுடியாது என்பது கருத்து.

காத்தல் – தொழிற்பெயர்; அரிது – குறிப்பு வினைமுற்று

ஏறி – வினைஎச்சம் வெகுளி – இரண்டாம் வேற்றுமை உருபுதொக்கது.

8, 9ஆம் குறட்பாக்களில் நீத்தாரின் சொல்லாற்றல் குறிப்பிடப் பெறுகிறது.

10. **அந்தணர் என்போர் அறவோர் மற்று எவ்வுயிர்க்கும்**
**செந்தண்மை பூண்டொழுக லான்.**

அந்தணர் – அழகிய தண்மையுடையவர் (இரக்ககுணம் உள்ளவர்); என்போர் – என்று சொல்லப்படுவோர்; அறவோர் – அறச்சிந்தனை உள்ள துறவு மேற்கொண்டவர்; எவ்வுயிர்க்கும் –

எல்லா உயிர்களிடத்திலும் (எந்த உயிரானாலும்) செந்தண்மை - சிறந் தண்ணளி; பூண்டு - பூணுகின்றவராய்; மேற்கொண்டவராய்; ஒழுகலான் - திகழ்வதனால்.

எந்த உயிரானாலும் எல்லா உயிர்களிடத்திலும் சிறந்த நிலையில் இரக்க உணர்வு மேற்கொண்டவராய்த் திகழ்பவரே அழகிய தண்மையுடையவர் (அந்தணர்) என்று சொல்லப்படுபவர்கள்; அவர்களே அறச்சிந்தனை உள்ள துறவு மேற்கொண்டவர்.

உயிர்களிடத்தில் இரக்கம் உள்ளவர்கள்தாம் நீத்தார் என்பது கூறப்பெற்றது.

மற்று - வினைமாற்றுச் சொல், எவ்வுயிர்க்கும் - முற்றும்மை,

## அறன் வலியுறுத்தல்

அறம், பொருள், இன்பம் ஆகிய
மூன்றனுள் அறத்தினை வலியுறுத்துதல்

1. **சிறப்பு ஈனும் செல்வமும் ஈனும் அறத்தின் ஊஉங்(கு)**
 **ஆக்கம் எவனோ உயிர்க்கு**

சிறப்பு - பெருமை; புகழ்; இன்பம்; ஈனும் - கொடுக்கும்; செல்வமும் - பொருட்செல்வமும்; ஈனும் - கொடுக்கும்; அறத்தினூ உங்கு - அறத்தைக் காட்டிலும்; ஆக்கம் - உயர்வு; எவனோ ? - எது; உயிர்க்கு - மனித உயிர்க்கு.

பெருமை, புகழ், இன்பம் ஆகியவற்றையும் பொருட்செல்வத்தையும் கொடுக்கும் அறச்செயலைக் காட்டிலும் மனித உயிர்க்கு உயர்வானது எது ? அறமே உயர்வானது ஆகும்.

ஈனும் - செய்யும் என்னும் முற்று; ஊஉங்கு - இன்னிசை அளபெடை; எவனோ? - வினா.

அறத்தின் உயர்வு கூறப்பட்டது.

2. **அறத்தின் ஊஉங்கு ஆக்கமும் இல்லை அதனை**
 **மறத்தலின் ஊஉங்கு இல்லை கேடு.**

அறத்தின் ஊஉங்கு - அறம் செய்வதைக் காட்டிலும்; ஆக்கம் - உயர்வு, செல்வவளம்; இல்லை - வேறில்லை. அதனை - அறம் செய்வதை; மறத்தலின் ஊஉங்கு - மறப்பதைக் காட்டிலும்; கேடு - தீங்கு (வறுமை); இல்லை - வேறில்லை.

அறம் செய்வதைக் காட்டிலும் உயர்வான செல்வவளம் வேறில்லை; அறம்செய்தலை மறப்பதைக் காட்டிலும் தீங்கு விளைவிப்பது வேறில்லை.

ஊஉங்கு - இன்னிசை அளபெடை; இல்லை - குறிப்பு வினைமுற்று

**3. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே
செல்லும்வாய் எல்லாம் செயல்**

ஒல்லும் வகையான் - தமக்கு இயன்ற முறைமையால்; அறவினை - அறமாகிய செயலை; ஓவாதே - இடைவிடாமல் ; செல்லும்வாய் எல்லாம் - வாய்ப்பு ஏற்படும் இடத்தில் எல்லாம் ; செயல் - செய்யவேண்டும்

ஒவ்வொருவரும் தம்மால் இயன்ற முறைமையால் வாய்ப்பு ஏற்படும் இடத்தில் எல்லாம் அறமாகிய செயலினை இடைவிடாமல் செய்ய வேண்டும்.

அறம் செய்யும் முறை கூறப்பட்டது.

செயல் - உடன்பாட்டு வியங்கோள் வினைமுற்று

**4. மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்துஅறன்
ஆகுல நீர பிற**

மனத்துக்கண் - மனதில்; மாசிலன் - குற்றமில்லாதவன்; ஆதல் - ஆதல் வேண்டும்; அனைத்து - அவ்வளவே; அறன் - அறமாகும். பிற - மற்ற புறச் செயல்கள்; ஆகுல நீர - ஆரவாரத் தன்மை கொண்டவை.

அறம் செய்பவன் தன்மனதில் குறறமில்லாதவன் ஆதல் வேண்டும்; அவ்வளவே அறச்செயலின் தன்மையாகும்; மற்ற புறச்செயல்கள் அனைத்தும் ஆரவாரத் தன்மை கொண்டவை ஆகும். மனதில் குற்றம் உடையவனாய் அறம் செய்தல் பயன்தராது என்பதாம்.

ஆதல் - வியங்கோள் வினைமுற்று; அறன் - கடைப்போலி. நீர - பன்மை வினைமுற்று.

5. **அழுக்காறு அவாவெகுளி இன்னாச்சொல் நான்கும்**
**இழுக்கா இயன்ற(து) அறம்.**

அழுக்காறு - பொறாமை; அவா - பேராசை; புலன்மேல் செல்லும் ஆசை; வெகுளி - கோபம்; இன்னாச்சொல் - பிறர்க்குத் துன்பம் தரும் சொல்; இழுக்கா - நீக்கி; நான்கும் - மேற்சொன்ன நான்கும்; இயன்றது - செய்யப்பெறுவது; அறம் - அறமாகும்.

பிறர் வளம்கண்டு கொள்கின்ற பொறாமை, பேராசை, கோபம், பிறர்க்குத் துன்பம் தரும் சொல் ஆகிய நான்கினையும் நீக்கி இடைவிடாது செய்யப்பெறுவதே அறமாகும்

நான்கும் - முற்றும்மை; இழுக்கா - செய்யா என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.
அறத்தின் இயல்பு இரண்டு குறள்களில் கூறப்பட்டது.

6. **அன்று அறிவாம் என்னாது அறம்செய்க மற்றுஅது**
**பொன்றுங்கால் பொன்றாத் துணை**

அன்று - பின்னொரு நாளன்று; அறிவாம் - அறச்செயல் பற்றி அறிந்து அதனைச் செய்வோம்; என்னாது - என்று கருதாமல்; அறம் செய்க - அறத்தினை நாள்தோறும் செய்ய வேண்டும். மற்று அது - அவ்வாறு செய்யும் அறமானது; பொன்றுங்கால் - உயிர்போகும் காலத்து; பொன்றாத் துணை - அழியாத துணையாகும்.

பின்னொரு நாளில் அறம்பற்றி அறிந்து அதனைச் செய்வோம் என்று கருதாமல் நாள்தோறும் அறத்தினைச் செய்ய வேண்டும்; அவ்வாறு செய்யும் அறமானது ஒருவனுடைய உயிர்போகும் காலத்தில் அவனது உயிர்க்கு அழிவில்லாத புகழ்த் துணையாக அமையும்

செய்க - வியங்கோள் வினைமுற்று; மற்று - வினைமாற்றுச் சொல்; பொன்றா - ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம்.
உயிருள்ளபோதே அறம் செய்ய வேண்டும் என்பது கூறப்பட்டது.

7. **அறத்தாறு இதுவென வேண்டா சிவிகை**
**பொறுத்தானோடு ஊர்ந்தான் இடை**

அறத்தாறு - அறத்தின் வழி; (பயன்) இதுவென - இதுதான்

என்று; வேண்டா - அளவிட்டுக் கூறவேண்டியதில்லை; சிவிகை; - பல்லக்கு; பொறுத்தானோடு - சுமப்பவனோடு; ஊர்ந்தான் - அமர்ந்து செல்பவன்; - இடை - இடையே;

அறத்தின் பயன் இதுவென அளவிட்டுக் கூறவேண்டியதில்லை; பல்லக்கைச் சுமப்பவனுக்கும் அதில் அமர்ந்து செல்பவனுக்கும் இடையே உள்ள நிலையைவைத்து உணர்ந்து கொள்ளலாம். அறம் செய்தவன் பல்லக்கில் அமர்ந்து வர அறம் செய்யாத மற்றவன் அப்பல்லக்கைச் சுமக்கிறான் என்கிறார்.

ஊர்ந்தான் - வினையால் அணையும் பெயர்

அறச்செயல் துணையாகும் நிலை கூறப்பட்டது.

8. **வீழ்நாள் படாஅமை நன்றுஆற்றின் அஃதுஒருவன்**
**வாழ்நாள் வழியடைக்கும் கல்**

வீழ்நாள் - வீணாகக் கழியும் நாள்; படா அமை - ஏற்படாமல்; நன்று - அறச்செயலை; ஆற்றின் - செய்தால்; அஃது - அது; ஒருவன் - ஒருவனுடைய; வாழ்நாள்; வாழ்க்கை வாழும் நாள்; வழி - உண்டாகும் வழியை; அடைக்கும் கல் - தடுக்கும் கல்லாகும்.

வாழ்கின்ற நாளில் வீணாகக் கழியும் நாள் ஏற்படாமல் அறச்செயலைச் செய்தால் அஃது ஒருவனுடைய வாழ்க்கை நாளை உண்டாக்கும் பிறவியின் வழியைத் தடுக்கும் தடைக்கல்லாக அமையும்.

படாஅமை - இசைநிறை அளபெடை; ஆற்றின் - செயின் என்னும் வாய்பாட்டு வினைஎச்சம். வாழ்நாள் - வினைத்தொகை.

அறம் பிறவித் துன்பம் நீக்கும் என்பது கூறப்பட்டது.

9. **அறத்தான் வருவதே இன்பம் மற்றுஎல்லாம்**
**புறத்த புகழும் இல.**

அறத்தான் - அறம் செய்வதால்; வருவதே - வருவதுதான்; இன்பம் - இன்பம் ஆகும். மற்று எல்லாம்; - மற்றவை எல்லாம் புறத்த - இன்பம் அல்லாத துன்பமே; புகழும் இல - புகழ் உடையதும் இல்லை.

அறச்செயலால் வருகின்ற இன்பமே இன்பமாகும்; மற்ற

செயல்களால் வரும் இன்பம் இன்பமன்று; துன்பமே ஆகும். அதுமட்டுமல்லாது புகழ் உடையதும் இல்லை.

வருவதே - தேற்றேகாரம்; புறத்த - அகர ஈற்று வினைமுற்று - அறம்செய்பவரே இன்பமும் புகழும் அடைவர் என்பது கூறப்பட்டது.

**10. செயற்பாலது ஓரும் அறனே ஒருவற்கு**
**உயற்பாலது ஓரும் பழி.**

ஒருவற்கு - ஒருவனுக்கு; செயற்பாலது - செய்வதற்குரிய செயல்; அறனே - அறச்செயலே; உயற்பாலது - நீக்க வேண்டியது; பழி - பழிதரும் செயலே ஆகும்.

ஒருவன் செய்வதற்குரிய செயல் என்பது அறச்செயலே; நீக்கவேண்டியது என்பது பழிதரும் செயல் ஆகும். எனவே அறன் புகழ்தரும்; பிறசெயல் பழிதரும் என்பதாம். செய்யவேண்டியதும் விலக்கவேண்டியதுமான செயல்கள் கூறப்பட்டன.

ஓரும் - அசைநிலை.

*(தொடரும்....)*

## மடாலய நிகழ்வுகள்

24.07.2016 அன்று அரு.சா. நாராயணசாமி குருபூஜையும் 26.07.2016 அன்று காளையார் கோவில் செல்லப்ப சுவாமி குருபூஜையும் சிறப்பாக நடைபெற்றன. 27.07.2016 முதல் 08.08.2016 வரை ஆடிப்பூரத் திருவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

15.08.2016 அன்று சுதந்திர தினவிழா கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக்குலேஷன் மேல்நிலைப் பள்ளி வளாகத்தில் நடைபெற்றது. டாக்டர் ரவீந்திரன் தேசியக் கொடியை ஏற்றி வைத்துச் சிறப்பித்தார். டாக்டர் செல்லப்பா வரவேற்புரை வழங்கினார். அறங் காவலர் திரு. கண்ணப்பன் அவர்கள் சிறப்புரை ஆற்றினார். திரு. மாயாண்டி நன்றி நவின்றார். சனாதன உலகப் பல்கலை அறநிலைக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர், முதல்வர்கள், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள், மாணவர்கள் திரளாகக் கலந்து கொண்டனர்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**